மாசிமக வெளியீடு.



திருப்பணி நயினார்

# மயில் விடு தூது.

ஆசிரியர்

பண்டித கவிமணி

ஸ்ரீ திருமலைசாமி அய்யங்கார்

No. 22. தெற்குமாடத் தெரு, ஸ்ரீவில்லிபுத்தூர்.

(நான்காம் பதிப்பு)

1959.

உ

ஸ்ரீ ஷண்முக ஸஹாயம்.



திருப்பணி நயினர்

# மயில் விடு தூது.

இஃது

தச்சநல்லூர், அரு. அரு. சோம. சர்க்கரைத் தொழிற்சாலை முன்னுள் அசிஸ்டெண்டு இஞ்சினீயர் பண்டிதகவிமணி

ஸ்ரீ திருமலைசாமி அய்யங்காரவர்களால்

இயற்றப்பட்டு

பிரம்ம ஸ்ரீ N. மன்னுர்சாமி ஐயர் அவர்கள்

பொருளுதவி கொண்டு வெளிவருவது.

(முதற் பதிப்பு 1922.)

உ

சிவமேதுணை

# நூலைப்பற்றிய அபிப்பிராயம்

தெய்வத் திருநெறிய தமிழ் இக்காலம் கூடிய வரை ஒழுங்குபெற நடைபெறும் திருநெல்வேலி என்னும் சிவபுரம்தமிழ் மக்கள் ஒவ்வொருவர் அறிவிலும் மனத்தும் திகழ்வது. இதன் நடுவே வாய்ந்த திருக்கோவில் இமயம், குமரி என்னும் எல்லைவாய்ந்த நம் நாட்டுப் பெரியதிருக்கோவில்களுள் ஒன்று. இக்கோவில் மேலைச் சூழலில் கண்கவர் வனப்புவாய்ந்த திருவுரு ஒன்று தமிழ்த் தெய்வமாகிய முருகனுக்கு உண்டு; அத்திருவுரு ஒரு கல்லில் ஆறு அழகிய திருமுகமும், மற்றும் ஒவ்வொரு உடல் வகுப்பும், அவ்வழகதற்கேற்ப அழகுற அமைந்து, அம்மையார் இருமருங்கமைய, மயில் தாங்க உள்ள தன்மையைக் கண்டவர் ஓவியத் திறன் வியப்பும் மனக்கசிவும் பதிந்ததிற அன்பும் பொருந்தி வாழ்வார் என்பது ஒருதலை. இதனை நம் அய்யங்கார் அவர்கள் மயில் விடு தூதில் "முற்றுமொரு கல்விக் கிரகமெனக் கண்டவருட் கொண்டாலும் கல்விக் கிரகமவன் காண்மயிலே" என்ற கலிவெண்பாக் கண்ணி தெளிவுற விளக்குவது எனது சிற்றிளம் பருவந் தொட்டுப் பலருங்கூறயானும் கண்டுள்ள உண்மையாம்.

இக்கடவுளிடத்து அன்பு பூண்டாருள், அக்கடவுட்டிருமுன் பணிபல இயற்றி பத்திமையும் அடிமையும்கொண்ட அமாவாசைப் பரதேசி என்னும் பெரியர் ஒருவர். அவர் அங்கு முருகனைக் காணவரும் அன்பர் திறனும் செயலும் கண்டு பலபணி அமைப்பார். அவருள் ஸ்ரீ திருமலைசாமி அய்யங்கார் அவர்கள் என்னும் தமிழறிஞர் ஒருவர்; அய்யங்காரவர்கள் பன்னூற்றுறைகண்ட செம்மையினர். தவத்திற்பெருகி அடங்கொணா ஆண்மை கொண்டு பல்லண்டம் பகுத்தாண்ட சூரபதுமனின் சூரக்கூறுகிய மயிலினையே அக்கடவுளிடம் "தூது" அனுப்புவதாகிய நூலியற்றினர்; தமிழ் நயம், பன்னூலறிவு, அன்பு திறம் பாட்டுரிமை இன்னின ஒருங்கே நிரம்பித் திகழ்வது அந்நூல்.

நமது அய்யங்கார் அவர்கள் பண்முறை இன்னிசை பாடுவார்கேற்ப, "முருகன் கிளிக்கண்ணி" என ஒரு நூலும் இயற்றினர். இந்நூலில் குமரன் ஆடல்கூறும் ஆன்றோர் பலர் கருத்தும் மொழியும் பொன்னெனப் போற்றியுள்ள தன்மை யாவரும் வியக்கத்தக்கதே.

(ஒப்பம்) காருடை சு. சூரியமூர்த்தி பிள்ளை,

(7 th Sep. 1927) மதுரை.

கவிராஜ பண்டிதர் உயர்திரு. ஜெகவீரபாண்டியனுர்
அன்புடன் அருளிய சாற்றுக்கவி.

அயில்விடுவேன் அமரர்சிறை விடுதியென
ஒருதூது அசுர வேந்தன்
செயலறிய விடுத்தருளிச் செந்தூரில்
இனிதமர்ந்த செவ்வே ளின்பால்
மயில் விடு தூது எதிர்விடுத்து மன்னுகதி
வரவோர்ந்து மகிழ்ந்து சேயோன்
இயலறிய அயலறியாது இனிதமர்ந்து
தனிநோக்கில் இசைந்து நின்ருன்.

---

அன்னவன்தான் யாவனெனில் அம்புயமாது
அமர்மார்பன் ஆழி அங்கை
மன்னியுள திருமாலின் மலரடிக்கே
பெருமாலாய் மருவி வாழ்வோன்
என்னனைய புலவர்கள்பால் இன்னுயிராம்
நட்பாளன் எவர்க்கும் அன்பன்
பொன்னனைய குணமுடையான் திருமலைசாமிப்
பெயர்கொள் புலமை யோனே.

திருவள்ளுவர் நிலையம்,
127, மேலமாசிவீதி, மதுரை.

திருவருள் துணை.

# கோவை, ஸ்ரீமத் சம்பந்த சரணாலயத் தம்பிரான் சுவாமிகள்

## (சிவக்கவிமணி)

### அன்புடன் அருளிய முன்னுரை.

ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பண்டிதகவிமணி ஸ்ரீ இருமலைசாமி அய்யங்கார் சுவாமிகள் எனது நீண்டநாள் நண்பர். அவர்களது தமிழாற்றலும், முருகப்பெருமானிடத்துள்ள பேரன்பும், சேக்கிழார் பெருமான் திருப்பாட்டிற்கொண்டுள்ள பேரார்வமும் எங்கள் நட்பு வளர்வதற்குக் காரணமாயின. அவர்கள் இயற்றிய மயில் விடு தூது என்னும் நூலைப் படித்தும், அவர்களே சொல்லக் கேட்டும் பெரிதும் இன்புற்றேன். பழுத்த தமிழ்ப் புலமையோடு பழுத்துத் தழைக்கும் அன்பு நீரும் கலந்து ஆற்றொழுக்காகிய அழகின் அமைந்து இனிது விளங்குகின்றது இந்நூல். முருகப்பெருமானிடம் இதன் ஆசிரியருக்குள்ள பதிந்த அன்பின் திறம் விளங்கும் பல பகுதிகள் இந்நூலினுட் காணலாம். முருகப்பெருமான்

மீது கிளிக்கண்ணி முதலிய நூல்களும் இயற்றி யுள்ளார்கள். அவற்றையுங் கண்டு இன்புற்றேன். இவர்கள் அன்பின் திறங்கண்டு இவர்களைச் சிவத் திருமலைசாமி அய்யங்கார் என்று பேரிட்டு அழைக்க என் மனம் விரும்புகின்றது. திருமலை என்பது திருக்கயிலாய மலையின் பெயர்.

"நீரனிருந்த திருமலை சூழுமென்பர்"— திருமந்திரம்.

"சதுரன்சிற்றம் பலவன் திருமலை"—தேவாரம்.

திருமலைச் சருக்கம், திருமலைச்சிறப்பு-பெரிய புராணம். வைணவ சமயத்திலும் ஆழ்வார்கள் பாடல்பெற்ற திருமலை ஒன்று உண்டு, ஆனால் அது பொதுவாய் விளங்குகின்றது. இதன் ஆசிரியரும் இவரது நூல்களும் நீடு நின்று நிலவி உலகுக்குப் பயன் தந்து விளங்குக.

அடியார்க் கடியேன்,
C. K. சுப்பிரமணிய முதலியார்,
சேக்கிழார் நிலையம், வைசியர் வீதி, கோவை.

உ

# அருணகிரியார் திருப்புகழ்.

நீலங்கொள் மேகத்தின் மயில்மேலே
　　நீவந்த வாழ்வைக்கண் டதனாலே
மால்கொண்டபேதைக்குன் மணநாறும்
　　மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே
வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே
　　வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே
　　நானென்று மார்தட்டும் பெருமாளே.



ஸ்ரீ ஷண்முக ஸகாயம்.

# திருப்பணி நயினர் மயில் விடு தூது.

## காப்பு

சித்தி விநாயகனைச் சித்தகண நாயகனைப்
பத்தியினாற் பாதம் பணிகின்றேன்—நத்துமயில்
தூண்டுங் குமரற்குத் தோகைமயில் தூது செல்ல
வேண்டுந் தமிழ்த்தழைய வே.

தாதுற்ற தண்கடப்பந் தார்புனையும் வேலவன்மேல்
மாதுற்றுப் பச்சை மயிலைவிடு—தூதுக்குக்
கங்கையொடு திங்கள்பணி தங்குசடைச் சங்கரன் மெய்ச்
சங்கரியென் மீனாக்ஷி சார்பு.

பூமேவு பச்சைப் புயல்வண்ணன் புண்டரீக
மாமேவு மாயன் மகிழ்மருகன்—பூமேவு
வேதாவை வெஞ்சிறையில் மேவவிட்டான் விஞ்சையரற்
கோதா வுகந்த வொருபெருமான்—தீதான
சூரற்குஞ் சுற்று துணைவர்க்குஞ் சூழ்கிரௌஞ்சப்
போருக்குந் தொட்ட பொருவேலான்—நேருற்ற

சேவற் கொடியுடைய சேய்; வள்ளி காதலன்; எம்
ஆவற் குரிய அருநிதியம்—தாவற்ற
ஆதவன்போ லுற்றூர் அகவிருளை யோட்டிமிளிர்
மாதர் வடிவம் மருவினை ஞன்—ஆதரவாய்த். 1

துற்ற புலவோர் துயர்தீர்த்த சோதிநெடும்
கொற்ற மிகுவேற் குலக்குமரன்—உற்ற
குடமா முனிக்குங் குருவாத் தமிழைத்
திடமா வுபதேசஞ் செய்தோன்—அடல்சேரும்
ஞானகுரு வாயுலகம் நாடி அடிபணியுந்
தானமுற நெல்லைநகர்த், தாயகத்தான்—ஆனமரும்
அஞ்சு முகத்தார்க் கினியான்: அமரகத்தே
அஞ்சு முகத்தாருக் காறுமுகன்—செஞ்செவே
சாறயர்வார் வேடர் சரிகுறவர் எல்லோரும்
வீறயர வேளைவித்த வெல்கழலோன்—ஏறுகின்ற. 2

தாய தனிமேக சாலமுறத் தாளுடும்
சாயல் தழைத்த தனிமயிலே!—நீயவிடப்
பாந்தள் தனையடக்கிப் பார்மேவும் பேதையர்கட்
காங்கள் மயலகற்றும் ஆய்மயிலே—காந்தளெனும்
மெல்விரலார்க் கொப்பெடுக்க வேகவினி யோங்குகின்ற
வல் விரகார் காதல் வனமயிலே—சொல்லரிய
உன்பெருமை யாரே உரைப்பார்கள் இப்புவியில்
உன்மஹிமை சற்றே உணர்த்தக்கேள்—உன்னரிய
உன்னு லலவோ உயர்தேவர் இந்திரனும்
நன்னர் நலமே நயந்ததுவும்—பன்னரிய. 3

மேன்மைக் குவந்தாய்! மிகவாக முன்னுனது
மேன்மைகுறித்தே மிளிர்கிரன்—பான்மைபெறும்
ஆற்றுப் படைமுழக்கி ஆனுத இன்பமெல்லாம்
ஏற்றும் இனலகற்ற ஏய்ந்ததுவும்—போற்றரிய
கண்ணு யிரம்படைத்துக் காதலொடு பூமியெல்லாம்
கண்ணு லளக்கும் களிமயிலே—விண்ணுர்
மயூர மனமகிழ்ந்து மல்குசிறை நீட்டும்
மயூர மலிசெல்வ மன்னே—துயூரப்
பணிமுகமே தேராப் பசுக்களையும் முன்னும்
பிணிமுகமே செய்துகக்கும் பெட்பின்-பிணிமுகமே. 4

நீயுற்று மேவும் நிலையதுபோற் சாலவே
நோயுற்று நாளும் நுடங்குகின்றேன்—மீயுற்ற
வெய்ய கொடைக்கே வியந்து மகிழுனைப்போல்
ஐயன் கொடைக்கே அலமருவேன்—துய்யன்
நினையேறி நின்ற நிலையெல்லாம் முன்னம்
நினைவேறி நின்று துயிலேன்—இனைவேறிப்
பாரிற் குதட்டுரையே பாலிக்கும் பச்சையிளங்
கீரக் குரைத்தாற் கிளர்வாமோ—நீரருகே
கால்மடக்கி நிற்குங் களிகுருகுக் கின்றிசைத்தால்
மால்முடக்கு மந்தோ மகிழ்வாமோ? சூல்கொண்ட. 5

மேகந் தனக்கே மிளிர வகுத்தக்கால்
ஆகும் பொருள்மற் றதற்குண்டோ? வாகுடனே
மங்கையரை யங்கே மலிவித்தால் என்மயலை
அங்குரைக்கு மாற்றல் அவர்க்கேது? தங்கரிய

காதல்தனை யாக்கிக் களிக்குங் கருப்புவிலோன்
றாதனுக வென்முல் துயரன்ரே?—மோதியுறுந்
தென்றல் தனையிதனைச் செப்பென்று விட்டக்கால்
சென்று திரும்பும் திறமுளதோ?—துன்றுமளி
தன்னைநான் கூவித் தகவமைத் தாலுமது
என்னைக் கவனியா தேகிடுமே?—அந்தோபின். 6

என்ன பொருளை எதனைநான் செல்ல விடுத்
தென்னுள் மயலை இயம்புவிப்பேன்—சொன்னயம
தாச்சுமந்து நல்ல தகுபாட லின்வகையால்
நாச்சுமந்து பாடுகின்ற நாவலர்போல் பேச்சுனக்குச்
சொல்லும் படியறியேன் தூதாக உன்னையே
செல்லும் படியாகச் சேவித்தேன்—மல்லல் கெழுங்
கார்கண் டுவக்கின்ற கார்மயிலே ஐயனறுந்
தார்கொண்டு வந்தால் தவிப்பொழிவேன் நேர்
கொண்ட
விண்ணப்ப மீதே விளம்புகின்றே னிப்புவியில்
நண்ணிக் கெடுப்பார் நனியுளரால்—திண்ணமாய்த்.7

தாமீய மாட்டார் பிறரீகை தாம்விலக்கிப்
போமீர மில்லார் புகுதாமுன்—தாமீறு
வேலர் விளங்கிழையார் வெய்யரவ ரேறுகின்ற
கோலத் தடங்தோகை கூர்மயிலே—ஞாலத்தில்
செல்வாக் குடையார் பிறர்க்குதவி யெவ்விடத்தும்
ஒல்லும் படியுஞற்ற ஒட்டாரோ?—அல்லர் தவிர்
நைடதனும் மாருதியும் நற்றேவர் எல்லாரும்
உய்விடத்துத் தூதுரைத்த தோராயோ?
கைவிடுத்துப்

போவதுண்டோ கார்நீலப் பொற்புறழு ம்மாமயிலே
தாவடைந்தார் தஞ்சமடைந் தக்காலம்—ஓவரிய. 8

செல்வம் பெருங்கீர்த்தி செப்புகின்ற எல்லாமிங்கு
ஒல்லும் உதவியிலென் றோராயோ? பல்நிறத்த
தோகையே வேலர் தொடர் மறுகு சென்றிடவந்
தோகையே கன்றிமுந்தே னேகின்றேன்-ஓகையுடன்
செல்லுந் துணைவியருஞ் சேராத என்தாயும்
கொல்லும் பலதீக் குளிப்பிப்பார்—சொல்லரிய
சாயற் சிகியே நான் தாவுற்ற வன்றிவிடி
மேயிற் சகியேன் விளிகின்றேன்—மீயுற்ற
இத்தனையோ ஏலப் பசுமயிலே இத்தரையில்
மொய்த்த நெடு மோகினியே பூண்டதென்பார்—
கைத்தரித்த. 9

மாலையொடு மங்கை மலர்பறிக்கும் மாலையிலே
சோலையமர் சொக்குத் துயர்க்கு மென்பார்—காலமுற
மங்கையரைக் காவா தயலனுப்பிக் கைகெட்ட
வெங்கோபர் எத்தனைபேர் மேதினியில்—எங்கோ
செலும்போ தெதுபிடித்துச் சேர்ந்ததென மேவா
வலும்போய் நகைவீங்க வாங்கே—சொலும்போதி
லேன்ற வெறியாட்ட மென்றாள் ஒருமலடி
கான்றுமிழூன் வேலாற்குக் காச்பினிலே—யான்ற
வகை
நற்பலிகளிட்டால் நலமென்றுரைத்திட்டாள்
கொற்பகைவேற் கண்ணா ளொரு கூனி-இப்பகலே. 10
காராட் டுதிரந்தோ யன்னை களனழித்து
நீராட்டி நீங்கென்றால் நீங்குமோ?—போராட்டு

வென்று களங்கொண்ட வெஞ்சினவேற் கோதைக்கு
நெஞ்சங் களங்கொண்ட நோயென்று—வஞ்சியரும்
மேலான சோதிடனை மேவித் தெளிந்தக்கால்
தோலாத உண்மை துணிந்துரைப்பான்—பாலாகக்
காண்பா மெனக்கருதிக் காணாற் கெனச்சிலரும்
நாண்பா விழுந்து நனிசென்றார்—பூண்பால
மானம் உலைப்ப மனமுலைந்து சோர்ந்திட நான்
ஆன பெருக் கூடா லமர்ந்த சிறு—பேனமென. 11

ஆவிபிழைத்தே அயர்கின்றேன் மேவரிய
காவி மழைபோல் களிமயில்! மே--தாவியவர்
ஏதானு மாத்தெளிந்து வந்தாலு மெற்கதுதான்
தீதாக நொந்து திரிந்திடுமே—ஓதாத
தீக்கிளவி யோராது செப்பித் தருகென்று
தீக்கவவர் வந்து செறியாமுன்— காக்கவெனக்
காகப் பறைக் கூட்டுங் காடுகொளு மாலையெனை
நோகக் கவற்றி நுழையாமுன்—தீக்குளிக்குஞ்
சேடியருந் தாயும் செறிந்தாவி போக்குதற்கு
நேடியெனை வந்திங்கு நேராமுன்—நாடியசீர். 12

வாழ்வளித்தே என்னை வளமயிலே அஞ்சலென்றித்
தாழ்விடத்தே யாதரித்தல் தக்கதுகாண்-சூழ்வறியும்
தேசிகமா ரும்மயிலே தேர்ந்திறுகக் கட்டினுமென்
கோசிகமு மின்னே குலைவுறுமே—பேசிப்
பிழைக்க வறியாப் பெரும்பேதைஇல்லத்
[illegible]

மையற் களைப்பு மிரிந்தோடும் நிற்கண்டால்
ஐயமற வெற்புரத்த லாகாதோ? மையல்வினை
கோலத் தனிமயிலுன் கோமானை யுற்றடைந்தென்
மாலைத் தவிப்பையெல்லாம் மாட்டாயோ?—
தாலத்தில். 13

"தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளினவர்
தங்கட் குரியவராற் ருமன்றே—இங்கிதமாக்
கொண்டிடுதல் வேண்டுமெனக் கூறுவா ராதலினும்
மண்டியென்னை ஆதரிப்பை மாண்புறவே கண்ட—
கவெம்

பாம்பை யடிப்படுத்துப் பார்மீ துலாவி மகிழ்
வாம்பைத்த தோகை வளர்மயிலே—காம்பெல்லாம்
விண்மீ னுறவிழல்போல் வீசொளியின் முத்தினத்தை
மண்மே லுதிர்க்கும் மலையகத்தே—எண்போது
தண் கடம்பந் தாங்கிக் கவினும் தகுமார்பத்
தொண்ணிதியை யுத்தமனை யுற்றணுகித்—தண்ண
முதாம். 14

முத்தமிழுந் தேர்ந்துணர்ந்த மூதறிவர் சொன்
மலையே!

சித்த மகிழுந் செகவீரா!—நத்தரசர்
கிட்டிப் பணியும் கிரீடாதிபா! கவிஞா!
கட்டழகி வள்ளிக்கே காந்தனே—இட்ட
அருண கிரிபுகழை அன்பா யுகந்த
கிரணக் குழைசேர் கிளியாய்! தருணிமகிழ்
வின்ப! கழிக் கூத்தா! விகடற் கிளையானே!
என்பகழிக் கூத்தன் இசைத்த தமிழ்க்—கன்பனே
தாயிறா வாமகற்குத் தக்க தமிழமுதம்
வாயினிக்க ஊட்டிவளர் வள்ளலே—நேய. 15

மிகுந்தபசி யாகிநெல்லை மேவிமகிழ் தேவே
தகுந்தபசி தாத்தழைக்குந் தாரு:—தகவுடனே
பாடும் புலவர் பனுவற் பதந்தேர்ந்து
கூடுங் கொடையுதவுங் கொண்டலே—நாடுபன்னூற்
சீர்த்தி விளக்கும் சிவபால சுப்ரமண்ய
கீர்த்தி மலிந்த இளர்மதியாய்! நேர்த்திமிகுந்
தந்தையெனத் தாங்கத் தழைக்கும் பலவளமும்
நந்தாம லோங்கும் நகர்நெல்லைப்- பைந்தாமம்
தேனுகுக்குந் தெய்வத் தெரியல் புனைகின்ற
தேனு குலம்விளக்கும் தெய்வமே—நானறியக். 16

கல்விக் கிரகமெனக் கண்டவருட் கொண்டாலும்
கல்விக் கிரகமவன் காண்மயிலே—செல்வத்
திருப்பணி ஆறுமுகத் தெய்வமே! அன்பர்
கருப்பதி யாவண்ணம் காக்கும்—பொருப்பரசே!
கோலத்த நெல்வேலிக் கோமானே கொற்றநெடு
வேலத்த மேவும் விதிப்பகையே—சாலவே
தம்மை நினைப்பவர்கள் தம்நினைப்பி னூடாகச்
செம்மைபெற வீற்றிருக்கும் செவ்வேளே! கொம்மை
பெருங்
கொங்கையிள மானிருவர்க் கூடிவிளை யாடல்புரி
செங்கமல மான்மருகா செந்தூரா! திங்களுநுஞ். 17

செஞ்சடையான் மைந்தா! செழுஞ்சேந்தா!
வன்பிலிகள்
நெஞ்சடைய நேரா நெடும்புகழாய்! தஞ்சமுற்ற
கீரற் கருள்வோய்! கிரவுஞ்ச மாமலைக்கும்

சூரற்குத் தொட்ட சுடர்வேலா—நீருற்ற
வெண்ணிலாக் கண்டாள் விழங்கிழையா ளவ்வுமை
யே
வெண்ணிலா நொந்தாள் வெதும்பியே-புண்ணுலாம்
வாளிக்கும் செவ்வந்தி மாலைக்கும் சித்தஜன்பூ
வாளிக்கு மஞ்சிவஞ்சி வைகியே—வாளிட்ட
கோலப்பாய் நீத்துக் குலவுதரை மேல்வளர்வாள்
வேலப்பபா சொப்பனத்தும் மேவியுனை-வேலப்பா.18

வேலப்பா வேலப்பா வென்றே புலம்பியெனை
யேலப்பா வென்றே யிரங்குகிறாள்—கோலக்
கருவிளையும் போலிருந்த கண்ணுமின்று முத்தக்
கருவிளையும் வாரிக் கடுத்தாள்—பெருவிளைவு
கொண்ட விளநகிலின் கோலங் கழிந்துடலம்
மண்டு பசலை மருவினுள்—கண்டபொழு
தெல்லாம் படுக்கையுற லேதென்று லன்னவளச்
செல்லார் பொழில்நிறையும் செந்தூரா-செல்லலின்றி
எல்லா ரகத்தினிலு மெங்கெங்கு நிற்கின்ற
கல்லார மார்பக் கடவுளே—பொல்லாத. 19

ஆசாரக் கோவை யறிந்தனையோ ஏழையென்னை
நீசாரா தேகுதற்கு நேர்ந்ததென்பாள்—மாசாரா
ஆதரவால் மேனி அடைய மெலிவாகி
ஊத உலையும் உடலானுள்—ஆதலினுல்
போதோடு சென்றவளைப் புல்லிப் புரந்திடுக
மாதேவி தந்த மதலையே—நீதமுடன்
இன்ன செயலால் இவளுயிரை யீவதல்லால்

சொன்னச் சிறுமதியின் சூடவிப்பாய்--வன்னமுகு
கண்ணின் கடுமாரி நீக்கிக் கவனிப்பாய்
எண்ணுங் குழலும் இனிதாகும்—நண்ணியே. 20

தங்கித் கழியாத் தனியானை போலுடற்றுங்
கங்கு லதுவுங் கழியுமே—சிங்கியடி
காண்கின்ற சேடியரும் காணும் செவிலியுடன்
மாண்புடைய தாயும் மருவுவரே—பூண்கின்ற
யாணர் கலங்களுடன் ஆய்தொடியுமின்றென்னைப்
பேணி மகிழ்வு பெருகுவளே—தாணையை
அன்ப ருளந்தேடி ஆண்டாண் டுறைகின்ற
கொன்பகுவேல் கைக்கணிசெய் குஞ்சரமே—
அன்புடனே
சென்றிடுக வன்றிச் செலவு தடைபடுமேல்
கன்றிடா துன்றூர் கனிந்துதவில்—துன்றிநான். 21

முன்னுகச் சென்றுன் வரவு மொழிவேன் பின்
கண்ணுலச் செய்தியையும் கட்டுரைப்பேன் பெண்ணு
வாள்
உன்மேல் மயலா லுயிரிழந்தாள் என்றபழி
துன்னுமல் காப்பேன் துயர்காப்பேன்—என்னவே
நல்லசமயந்தெரிந்து நண்ணுமென்றன் மையலெல்
லாம்
சொல்லித் துயர்தீர்ப்பை தோகையே—கல்லின்மே
லுன்னை யெழுதி உறவணங்கி யெஞ்ஞான்றும்
மன்னித் துதிப்பேன் வனமயிலே—உன்னைநான்
தாயாகத் தந்தையே தானுகக் காக்கின்ற
சேயாகத் பேணிச் செழிப்புறுவேன்—ஓயாது. 22
மாமாலை யீமாலை வாராமுன் கந்தனன்
பூமாலை வாங்கிப் புகு. 222.

உ

ஸ்ரீ ஷண்முகசகாயம்.

# திருப்பணி நயினார்

# ஒருபாவொருபது.

## காப்பு,

பரத நூல்பகர் பாடகச் சீரடிக்
கரகம் போனகிற் காரிகை யார்பயில்
திருநெல் வேலியாள் தெய்வக் குமாரனைப்
பரவு செந்தமிழ்ப் பாடல் தழையவே. 1

இந்து மோலி புனைந்தருள் எம்பிரான்
தந்த யானை தளிரடி போற்றுவாம்
தந்த மானைத் தனிப்புணர் ஷண்முகன்
சந்த மாலை தழைத்தருள் செய்யவே. 2

தந்தை யின்றனை தாக்குந் தகவினன்
நந்த கோப னனந்தனை யேத்துவாம்
இந்தி ரன்மகள் வள்ளி யிவர்புணர்
சந்த லோலன் தமிழ்க்கருள் தாங்கவே. 3

செங்கை யின்முறை யேடு செபவடந்
தங்கு வெண்கலைத் தையல்தாள் போற்றுவோம்
சங்கு சக்கரன் சலச மலர்ப்பதக்
கங்கை யின்சுதன் காமர் கவிக்கரோ. 4

# நூல்.

மங்கலஞ்செய் கல்யாணி மாதங்கி பார்ப்பதியாள்
செங்கலச ஞானச் செருக்குடையான்—எங்கள்குகன்
வேலும் மயிலும் விளங்குகொடி வாரணமும்
சாலுங் கழலுமென் சார்பு. 5

புன்னைவன மேவும் புராதனிசீர்க் கௌரியென
தன்னையருள் சத்திச் சரவணனே—என்னைமனப்
பத்தியினால் ஆட்கொண்டு பல்தொழிற்கும் சித்திதரும்
சத்தியினால் நெஞ்சே யஞ்சல். 6

சல்லாபப் பைஞ்சிகியிற் சார்சலதிப் பாநுவென
உல்லாச மேவ வுவந்தொளிரும்—வல்லாளன்
செங்கமலக் கான்மலரென் சென்னிமனஞ் சேர்ந்திடமுன்
தங்குமலந் தள்ளவரு வான். 7

வானாறு கொன்றை வளர்மதியஞ் சேர்மோலித்
தேனாறு மேனித் திகம்பரற்கும்—கோனாகி
விஞ்சைப் பொருளை விரித்த குகனெனது
நெஞ்சப் பொருப்புகந்தான் நேர்ந்து. 8

நேர்ந்து பொருதடர்த்த நேரலிற் சூரனையே
தேர்ந்து வரமளிக்குந் தேவனெவன்? வார்ந்ததமிழ்த்
தேனுந் தினமாவும் தித்திக்கத் தந்தவள்ளி
மானுக்கு வந்த மகன். 9

மகனே! பழநியென மாதங்கி முத்துங்
குகனே! குருபரனே! கோனே!—நகமேவித்
தையல் தளிர்க்கைத் தடக்கையனே! தாழ்வான
மையல் தவிர்த்துண் மகிழ். 10.

மகிழ்மாறன் சொன்ன மறையா யிரத்தில்
மகிழ்மாறன் சொந்த மருகா—நெகிழ்வாயென்
நெஞ்சமதி லூறுகுகன் நேயமிக லாலென்றுந்
தஞ்சமுன தாண்மலரே தான். 11

தானவரை யட்ட தனிவேற் சரவணனே
வானவரை யூட்டிவளர் வானமுதம்—கானவரை
வேட்டுமா னைப்புணர வேழமா வைப்புகழும்
தாட்டிகனென் ஷண்முகநா தன். 12

தன்னிகரில் லாததொரு தற்பரமே நற்புனத்து
மின்னிடையாள் வள்ளி மிகுமோகா!-கொன்னிவருஞ்
சேவற் கொடியுயர்த்துஞ் செந்திற் பதியானென்
ஆவற் குகந்த அரசு. 13

அரசுதர வாழ்வுகொண்ட ஆகண்ட லன்செய்
பரிசுதவக் குஞ்சரியாள் பாகா!—விரசுதவப்
பண்ணவரும் வந்தனைகள் பண்ணவரும் நெல்லைக்கிம்
மண்ணவரும் கொண்டனம்நே மம், 14

நிலங்காண வேஙிசியை நீக்கிப்ர காகித்து நீபமலர்
வீசு சமுகம்
அலங்கார பாக்யமா வாசைமகிழ் தமிழ்ஞான
பண்டிதனமர்ந்த சமுகம்
கவங்காதசூரிறையும் மயிலாயிடத்தந்திகண்டுவள்ளி
கொஞ்சு சமுகம்
அலங்கார மானதிரு நெல்வேலியாள் சிங்கம் ஆறுமுக
தெய்வ சமுகம்.

## வாழி.

அருள்புரி கௌரி சங்க மணிகையன் பிராமி தூண்டும்
மருள்புரி மதமா வானம் மாரியும் புவியும் வாழி
சுருள்திரைச் செந்தில்நெல்லைச் சுதந்திரர் அடியார்
வாழி
குருபரன் வாழி வேலுங் கோழியும் மயிலும் வாழி.

முற்றிற்று.

